ஸ்ரீரஸ்து.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமத்வேதாந்த... விரசிதம்

ஆ...ஸஞ்ஜீவிகாவ்யாக்யா

...நாடகம்

# ஹஜைஸாவிம்ஶம்.

தச்சிஷ்ய விரசித

...ஸஞ்ஜீவிகாவ்யாக்யா ஸஹிதம்.

ப்ரஹ்மஸ்ரீ, தி॥ ஸ்ரீநிவாஸஶாஸ்த்ரிணா விரசித

த்ராவிட டீகாத்வய ஸஹிதம்.

தி॥ ...நாத ஶாஸ்த்ரிஸூநுநா

T. S. பாலஸுப்ரஹ்மண்ய ஶாஸ்த்ரிணா ...

ஶாஸ்த்ர ஸஞ்ஜீவிநீ முத்ராக்ஷர ஶாலாயாம்

முத்ரிதா ஸமிஜயதேதராம்

வெங்கவாரீ

1929



விலை] பஞ்சகோவிந்தம் [அணா 3



ஸ்ரீரஸ்து



ஸ்ரீசங்கராசார்யேப்யோ நம:



ஸ்ரீசங்கரபகவத்பாதா[redacted]ய விரசித

சர்படபஞ்ஜரிகா ஸ்தோத்ர வ்யாக்யானம்.



श्लो॥ भजगोविन्दं भजगोविन्दं
भजगोविन्दं मूढमते ।
संप्राप्ते सन्निहितेकाले
नहि नहि रक्षति डुकृञ्करणे ॥ १ ॥

ஶ்லோ॥ பஜகோவிந்தம் பஜகோவிந்தம்
பஜகோவிந்தம் மூடமதே ।
ஸம்ப்ராப்தே ஸந்நிஹிதேகாலே
நஹி நஹி ரக்ஷதி டுக்ருஞ்கரணே॥ க॥

பதவுரை.

மூடமதே = அஜ்ஞானத்தால் செய்யவேண்டியதை யறியாத புத்தியுடையவனே, ஸந்நிஹிதேகாலே = அந்தியகாலமானது நெருங்கி, ஸம்ப்ராப்தே ஸதி = வருங்காலத்தில்,

டுக்ருஞ்கரணே = (டுக்ருஞ்) என்னும் வியாகரணத்தில் சொல்லப்பட்ட வார்த்தையானது,
நஹி நஹி ரக்ஷதி = கொஞ்சமேனும் காப்பாற்றவே மாட்டாது,
(அதஏவ = ஆகையால்) கோவிந்தம் = பரமாத்மாவான ஸ்ரீமந்நாராயணனையே,
பஜ = ஸேவித்துவா.

(தாத்பர்யம்) ஓ புத்தியற்றவனே! பிராணோத்க்ரமண ஸமயத்தில் (டுக்ருஞ்) என்ற வியாகரண சாஸ்திரம் உன்னைக்காப்பாற்ற மாட்டாதென்பது நிச்சயம். ஆகையால் நீ பரமாத்மாவாகிய கோவிந்தனை பஜிப்பாயாக.

मूढ जहीहि धनागमतृष्णां
कुरुसद्बुद्धिं मनसिवितृष्णाम् ।
यल्लभसे निजकर्मोपात्तं
वित्तं तेन विनोदय चित्तम् ॥ २ ॥

மூடஜஹீஹி தநாகமத்ருஷ்ணாம்
குருஸத்புத்திம் மநஸிவித்ருஷ்ணாம் ।
யல்லபஸே நிஜகர்மோபாத்தம்
வித்தம் தேந விநோதய சித்தம் ॥ ௨॥

மூட = அறிவில்லாதவனே!
தநாகமத்ருஷ்ணாம் = தனத்தை ஸம்பாதிப்பதிலிருக்கப்பட்ட பேராசையை,
ஜஹீஹி = விட்டுவிடு,
வித்ருஷ்ணாம் - ஆசையில்நின்று விடுபட்டதான,
ஸத்புத்திம் = உத்தமமான அறிவை,
மநஸி = மனதில்,

லபஸ்வ = அப்பியாசத்தால் த்ருடப்படுத்திக்கொள்,
நிஜகர்மோபாத்தம் = தன் குலாசாரத்துக்கு ஏற்பட்ட காரியங்களாலடையப்பட்ட,
யத்வித்தம் = யாதொரு பொருளோ,
லபஸே = அடைகிறாயோ,
தேந = அந்தப்பொருளால்,
சித்தம் = மனதை,
விநோதய = ஸந்தோஷப் [படுத்து.

(தா-ம்.) ஓ மூடா! பணம் சம்பாதிக்கவேண்டுமென்னும் பேராசையைவிட்டு உன் மனதிலுள்ள பேராசையை ஒழித்து உத்தமமான அறிவை நிலை நிற்கச்செய். தன் குலாசாரத்திற்கு ஏற்பட்ட தொழிலால் எது கிடைக்கின்றதோ அப்பொருளால் உன்மனதைச் சந்தோஷப்படுத்திக்கொள். (௨)

नारी स्तनभर नाभीदेशं
दृष्ट्वामागा मोहावेशम् ॥
एतन्मांसवसादिविकारं
मनसिविचिन्तय वारं वारम् ॥ ३ ॥

நாரீஸ்தநபர நாபீதேசம்
த்ருஷ்ட்வா மாகா மோஹாவேசம் ।
ஏதந்மாம்ஸ வஸாதிவிகாரம்
மநஸி விசிந்தய வாரம்வாரம் ॥ ௩ ॥

நாரீஸ்தநபர நாபீதேசம் = ஸ்திரீகளுடைய குசமண்டலத்தையும், தொப்புள் பிரதேசத்தையும்,
த்ருஷ்ட்வா = பார்த்து,
மோஹாவேசம் = காமவிகாரத்தை,
மாகா: = அடையாதே,

மாம்ஸவஸாதிவிகாரம் = மாம்ஸம் சவ்வு முதலானவைகளால் விகாரமானது

ஏதத் = இதை,

மனஸி = மனதில்,

வாரம்வாரம் = அடிக்கடி,

விசிந்தய = ஆலோசித்துப் பார்.

(தா-ம்.) ஸ்திரீகளின் ஸ்தனபாரத்தையும் நாபீபிரதேசத்தையும் பார்த்து காமவிகாரமடையாதே, இவை மாம்ஸம், கொழுப்பு இவைகளின் விகாரமென்று அடிக்கடி மனதிற் சிந்தைசெய். (௩)

नळिनी दळगत जलमतितरळं
तद्वज्जीवित मतिशयचपलम् ।
विद्धि व्याध्यभिमानग्रस्तं
लोकं शोकहतञ्च समस्तम् ॥ ४ ॥

நளிநீ தளகத ஜலமதிதரளம்
தத்வஜ்ஜீவித மதிசய சபலம் |
வித்தி வ்யாத்யபிமாநக்ரஸ்தம்
லோகம் சோக ஹதஞ்ச ஸமஸ்தம் || ௪||

நளிநீதளகதஜலம் = தாமரை இலையை அடைந்த ஜலமானது,

அதிதரளம் = மிகவும்சஞ்சலமானது,

தத்வத் = அப்படியே,

ஜீவிதம் = பிராணனும்,

அதிசயசபலம் = மிகவும் சஞ்சலமானது,

ஸமஸ்தம்லோகம் = எல்லாஉலகமும்,

வ்யாத்யபிமாநக்ரஸ்தம் = வி

யாதி அகங்காரம்முதலியவைகளால் பீடிக்கப்பட்டதாகவும், ஶோகஹதம் = துக்கத்தால் பீடிக்கப்பட்டதாகவும், வித்தி = அறிந்துகொள்.

(தா-ம்.) தாமரையிலையை அடைந்த ஜலம்மிகசஞ்சலமானது அதுபோல் பிராணனும் மிக சஞ்சலமாக யிருக்கின்றது. உலகமுழுவதும் வியாதியினாலும் அஹங்காரத்தினாலும் பீடிக்கப்பட்டதாக துக்கத்திற் குள்ளாயிருக்கின்றதென் றறிந்துகொள். (௪)

यावद्वित्तोपार्जनसक्तः
तावन्निजपरिवारो रक्तः ।
पश्चाज्जीवति जर्झरदेहे
वार्तां कोपि नपृच्छति गेहे ॥ ५ ॥

யாவத்வித்தோபார்ஜநஸக்த:
தாவந்நிஜபரிவாரோ ரக்த: ।
பஶ்சாஜ்ஜீவதி ஜர்ஜரதேஹே
வார்த்தாம் கோபி நப்ருச்சதி கேஹே ॥ ௫ ॥

யாவத் = எதுவரையிலும், வித்தோபார்ஜநஸக்த: = பொருள் சம்பாதிப்பதில் ஆசை யுள்ளவனாக இருக்கிறானோ, தாவத் = அதுவரையிலும், நிஜபரிவார: = தன்னைச் சேர்ந்த ஸம்ஸாரம் குழந்தை முதலான பரிஜனமானது, ரக்த: = ஆசையுள்ளது, பஶ்சாத் = பிறகு, ஜர்ஜரதேஹே = வியாதி முதலானவைகளால் தளர்ந்துபோன இந்த தேகமானது,

𑌜𑍀𑌵𑌤𑌿 = பிராணனோடிருக்கும்போதே,
𑌕𑍋𑌽𑌪𑌿 = ஒருவனும்,
𑌵𑌾𑌰𑍍𑌤𑌾𑌂 = க்ஷேமவார்த்தையை,
𑌗𑍇𑌹𑍇 = வீட்டில்,
𑌨 𑌪𑍃𑌚𑍍𑌛𑌤𑌿 = விசாரிப்பதே இல்லை.

(தா-ம்) எதுவரையில் நீ பொருள் ஸம்பாதிப்பதில் ஆசையுடன் கூடினவனாக இருக்கின்றனையோ அதுவரையில் உன்னைச் சேர்ந்த பரிஜனங்கள் அன்புபாராட்டி வருவார்கள். அதன் பிறகு வியாதி முதலியவைகளால் தளர்ச்சியடைந்த உன் தேகம் உயிரோடிருந்தாலும் வீட்டிலொருவரும் உனது க்ஷேமத்தை விசாரிக்கமாட்டார்கள். (௫)

यावत्पवनो निवसति देहे
तावत्पृच्छति कुशलं गेहे ।
गतवति वायौ देहापाये
भार्या बिभ्यति तस्मिन् काये ॥ ६ ॥

𑌯𑌾𑌵𑌤𑍍𑌪𑌵𑌨𑍋 𑌨𑌿𑌵𑌸𑌤𑌿 𑌦𑍇𑌹𑍇
𑌤𑌾𑌵𑌤𑍍𑌪𑍃𑌚𑍍𑌛𑌤𑌿 𑌕𑍁𑌶𑌲𑌂 𑌗𑍇𑌹𑍇 ।
𑌗𑌤𑌵𑌤𑌿 𑌵𑌾𑌯𑍌 𑌦𑍇𑌹𑌾𑌪𑌾𑌯𑍇
𑌭𑌾𑌰𑍍𑌯𑌾 𑌬𑌿𑌭𑍍𑌯𑌤𑌿 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌕𑌾𑌯𑍇 ॥ ௬ ॥

𑌯𑌾𑌵𑌤𑍍 = எதுவரையிலும்,
𑌪𑌵𑌨𑌃 = மூச்சானது,
𑌦𑍇𑌹𑍇 = தேகத்தில்,
𑌨𑌿𑌵𑌸𑌤𑌿 = இருக்கிறதோ,
𑌤𑌾𑌵𑌤𑍍 = அதுவரையிலும்,
𑌗𑍇𑌹𑍇 = வீட்டில்,
𑌕𑍁𑌶𑌲𑌂 = க்ஷேமத்தை,
𑌪𑍃𑌚𑍍𑌛𑌤𑌿 = கேட்டுக்கொண்டிருப்பார்கள்,
𑌵𑌾𑌯𑍌 = மூச்சானது,
𑌗𑌤𑌵𑌤𑌿 = போகவே,
𑌦𑍇𑌹𑌾𑌪𑌾𑌯𑍇 = சரீரத்திற்

கபாயம் நேரிடவே,
பா⁴ர்யா = ஸம்ஸாரங்கூட,
தஸ்மிந்காயே = அந்த மூச்சில்லாத தேசவிஷயத்தில்
பி³ப்⁴யதி = பயப்படுகிறாள்

(தா-ம்) எதுவரையில் மூச்சானது உனது தேகத்தில் தங்கி இருக்கின்றதோ அதுவரையிலும் வீட்டிலுள்ளவர்கள் உனது க்ஷேமத்தை விசாரித்து வருவார்கள். தேகத்திற்கபாயம் ஸம்பவித்து அதனால் பிராணன் சரீரத்தைவிட்டு நீங்கியபொழுது மனைவி முதலியவர்களுங்கூட அந்த தேகத்தைப்பார்த்து பயப்படுகிறார்கள். (௬)

अर्थ मनर्थं भावय नित्यं
नास्ति तत स्सुखलेश स्सत्यम् ।
पुत्रादपि धनभाजां भीतिः
सर्वत्रैषा विहिता रीतिः ॥ ७ ॥

அர்த²மநர்த²ம் பா⁴வய நித்யம்
நாஸ்தி தத ஸ்ஸுக²லேஶ ஸ்ஸத்யம் ।
புத்ராத³பி த⁴நபா⁴ஜாம் பீ⁴தி꞉
ஸர்வத்ரைஷா விஹிதா ரீதி꞉ ॥ எ ॥

அர்த²ம் = பொருளை,
அநர்த²ம் = ஆபத்துகளுக்கெல்லாம் காரணமாக,
நித்யம் = எப்போதும்,
பா⁴வய = நிச்சயமா யெண்ணிக்கொள்,
தத꞉ = அப்பொருளால்,
ஸுக²லேஶ꞉ = சுகத்தினுடைய ஏகதேசாம்சங்கூட,
நாஸ்தி = இல்லை,
ஸத்யம் = நிச்சயம்,
(தத்கத²மிதிசேத் = அதெப்படி யென்றால்,) [களுக்கு
த⁴நபா⁴ஜாம் = பாக்கியவான்

வாக்யாதவி = மிகவுமென் புள்ள பிள்ளைகனிடமிருந்து கூட
வீதி: = பயம், [ந்து கூட
(ஜாயதே = உண்டாகிறது)
வஷாஸீதி: = இப்படிப் பட்டஸகல ஜனங்களாலும்
அனுபவிக்கப்பட்ட இந்த மார்க்கமானது,
ஸவத்ர = எல்லாவிடங்களிலும்,
விஹிதா = ஏற்பட்டிருக்கின்றது.

(தா-ம்.) தனம் ஆபத்திற்குக் காரணமென்று எப்பொழுதும் நினை; அதனால் கொஞ்சங்கூட சுகமில்லை என்பது நிச்சயம். அதெப்படி என்றால், தனம் முதலிய ஸகல ஸம்பத்துக்களும் பொருந்திய பாக்கியவான்களுக்குங்கூட புத்திரமித்திர களத்திராதியர்களால் பயமுண்டாகின்றது. இப்படி ஸகல ஜனங்களாலு மனுபவிக்கப்பட்ட இந்த வழக்கமானது எங்கும் ஏற்பட்டிருக்கின்றது. (எ).

बालस्तावत् क्रीडासक्तः
तरुणस्तावत्तरुणीसक्तः ।
वृद्धस्तावच्चिन्तासक्तः
परेब्रह्मणि कोपि न सक्तः ॥ ८ ॥

பாலஸ்தாவத் க்ரீடாஸக்த:
தருணஸ்தாவ தருணீஸக்த: ।
வ்ருத்தஸ்தாவ சிந்தாஸக்த:
பரேப்ரஹ்மணி கோபி நஸக்த:॥ அ॥

பாலஸ்தாவத் = பாலனாயிருக்கும்போது,
க்ரீடாஸக்த: = விளையாட்டிலாசையுள்ளவனாயும்,
தருணஸ்தாவத் = யுவாவாயிருக்கும்போது,

தருணீஸக்த: = நல்ல ஸ்திரீ விஷயத்தில் ஆசையுடைவனும்,
வ்ருத்தஸ்தாவத் = கிழவனு யிருக்கும்போது,
சிந்தாஸக்த: = கவலையுடையவனும்,
(பவதி = ஆகிறுன்,)
கோபி = இம்மூன்றவஸ்தைக்குள்பட்ட எவனும்,
பரே = ஸர்வோத்தமனுன,
ப்ரஹ்மணி = ஸர்வவ்யாபகரான ஸ்ரீ மந்நாராயணன் விஷயமாய்,
ஸக்த: = மனோவாக்காயங்களால் தியானபஜன நமஸ்காரம் முதலானவைகளைச்செய்யச் சக்தி யுள்ளவனுக,
ந = ஆகிறதில்லை.

(தா-ம்) (மனிதன்) பாலனுயிருக்கும்பொழுது விளையாட்டிலாசையுள்ளவனு யிருக்கின்றுன், யுவாவாயிருக்கும்பொழுது யௌவன ஸ்திரீகளிடத்தில் ஆசைகொண்டவனுயிருக்கின்றுன்; கிழவனுக இருக்கும்பொழுது கவலையுடையவனுக இருக்கின்றுன். ஸர்வோத்தமனுன பரபிரம்மத்திடத்தில் ஒருவனும் ஆஸக்தி யுள்ளவனல்ல. (அ)

का ते कान्ता कस्ते पुत्रः
संसारोय मतीव विचित्रः ।
कस्यत्वंवा कुत आयातः
तत्वं चिन्तय तादिहभ्रान्तः ॥ ९ ॥

காதே காந்தா கஸ்தே புத்ர:
ஸம்ஸாரோய மதீவவிசித்ர:
கஸ்யத்வம் வா குத ஆயாத:
தத்வம் சிந்தய ததிஹப்ராந்த:॥ ௯॥

தே = உனக்கு,
காந்தா = இச்சைக்கு விஷயமான ஸ்திரீ,
கா = யார்,
தே = உனக்கு,
புத்ர: = அபிமாநாஸ்பதமானபிள்ளை,
க: = யார்,
த்வம் வா = நீயேதானாகட்டும்,
கஸ்ய வா = இந்த ஜன்மத்திற்கு முன் யாருடையவன்,
குத: = எங்கிருந்து,
ஆயாத: = வந்தவன்,
அயம் = இப்படிப்பட்ட,
ஸம்ஸார: = குயவனுடைய சக்கிரம்போல்சுற்றப்பட்ட இந்தஸம்ஸாரமானது,
அதீவ = மிகவும்,
விசித்ர: = விசாரிக்கும்போது ஆச்சரியகரமாக இருக்கின்றது,
தத் = ஆகையால்,
இஹ = இதைவிசாரிக்கின்ற விஷயத்தில்,
த்வம் = நீ,
ப்ராந்த: = புத்திரமித்ரகளத்திரர் முதலானவர்களை வாஸ்தவமாய் நினைத்து பிரமிக்கிறாய்,
தத்வம் சிந்தய = வாஸ்தவத்தை வேதாந்த சாஸ்திரத்தாலும் ஸ்வானுபவத்தாலும்தெரிந்துகொள்.

(தா-ம்.) உன் மனைவியாவள்? உன் மகன் யாவன்? நீ யாவன்? எங்கிருந்து வந்தனை? இந்த குலால சக்கிரம் போன்ற ஸம்ஸாரம் வெகு விசித்திரமாக இருக்கின்றது. ஆகையால் நீ புத்திர மித்திர களத்திரர் முதலானவர்களை வாஸ்தவமாக நினைத்து பிராந்தி அடைந்திருக்கின்றாய் வாஸ்தவத்தைத் தெரிந்துகொள். (௩)

सत्सङ्गत्वे निस्सङ्गत्वं
निस्सङ्गत्वे निर्मोहत्वम् ।

निर्मोहत्वे निश्चलतत्वं
निश्चलतत्वे जीवन्मुक्तिः ॥ १० ॥

ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம்
நிஸ்ஸங்கத்வே நிர்மோஹத்வம் ।
நிர்மோஹத்வே நிஶ்சலதத்வம்
நிஶ்சலதத்வே ஜீவந்முக்தி: ॥ ௧௦ ॥

ஸத்ஸங்கத்வே=வேதாந்த சிரவண மநநாதிகளால் சுத்தாந்தரங்களான பெரியோர்களுடைய ஸங்கம் ஏற்படும்பக்ஷத்தில்,

நிஸ்ஸங்கத்வம்=புத்திர மித்திர களத்திரர்களில் விசேஷ அபிமான மில்லாமலிருக்குகையானது,

(ஸம்பவதி=அடையப்படுகிறது)

நிஸ்ஸங்கத்வே=ஜனஸங்க மில்லாமலிருக்குமானால்,

நிர்மோஹத்வம் = பொருள் முதலானதுகளில் ஆசையில்லாம லிருக்குகை யானது (ஏற்படுகிறது,)

நிர்மோஹத்வே = க்ஷேத்ராதிகளும் ஜயிக்கப்படுமானால்,

நிஶ்சலதத்வம் = நிர்மலஞான மானது (உண்டாகிறது,)

நிஶ்சலதத்வே=அப்படி சுத்தமான ஞான மேற்படுமானால்,

ஜீவந்முக்தி:=ஜீவன் முக்தனாக ஆகலாம்.

(தா-ம்.) ஸத்புருஷர்களுடைய ஸஹவாஸ முண்டானால் அபிமானப்பற்று நீங்கும். அபிமானப்பற்று நீங்கினால் ஆசை யொழியும். ஆசை யொழிந்தபின் நிர்மல ஞான பிராப்தி உண்டாகும். அந்த நிர்மல ஞானத்தினால் ஜீவன் முக்தனாகலாம். (௧௦)

वयसिगते कः कामविकारः
शुष्के नीरे कः कासारः ।
क्षीणे वित्ते कः परिवारः
ज्ञाते तत्वे कस्संसारः ॥ ११ ॥

வயஸிகதே க: காமவிகார:
ஶுஷ்கே நீரே க: காஸார: |
க்ஷீணே வித்தே க: பரிவார:
ஜ்ஞாதே தத்வே கஸ்ஸம்ஸார: || ௧௧ ||

வயஸி=யௌவனமானது,
கதே=போய்விடுமானால்,
காமவிகார: = மன்மதனாலு
ண்டாகக்கூடிய மனோவ்
யாகூலமானது,
க:=எது,
நீரே=ஜலமானது,
ஶுஷ்கே=சுண்டிப்போனால்,
காஸார:=குளம்,
க:=எப்படிப்பட்டது;
வித்தே=பொருளானது,
க்ஷீணே=ஒழிந்து விட்டால்,
பரிவார:=பரிஜனமானது,
க:=எப்படிப்பட்டது,
தத்வே=பரமார்த்த ஞானமா
னது,
ஜ்ஞாதே = குருபதேசத்தா
லேற்படுமானால்,
ஸம்ஸார: = அஹங்காராதி
பிரபஞ்சமானது,
க:=எப்படிப்பட்டது, அதா
வது முக்தனாக ஆகிறபடி
யால் அகங்காரம் முதலா
னவைகள் தானே நசிக்கு
மென கருத்து,

(தா-ம்.) யௌவனம் நீங்கியபின் காமவிகாரம் எத்தன்மையது? நீர்வற்றினகுளம் எப்படிப்பட்டதா யிருக்கும்? செல்வம் குறைந்தபின் பரிவாரங்கள் எத்தன்மை

யாவார்? பரமார்த்த ஞானமானது உண்டானபின், சமுசாரம் எப்படிப்பட்டதாகும். (கக)

मांकुरु धनजनयौवनगर्वं
हरतिनिमेषात् कालस्सर्वम् ।
मायामयमिद मखिलं हित्वा
ब्रह्मपदं त्वं प्रविश विदित्वा ॥ १२॥

மாகுரு தநஜநயௌவநகர்வம்
ஹரதிநிமேஷாத் காலஸ்ஸர்வம் ।
மாயாமயமித³ மகி²லம் ஹித்வா
ப்³ரஹ்மபத³ம் த்வம் ப்ரவிஶ விதி³த்வா ॥ க௨ ॥

தநஜநயௌவநகர்வம் = பொருள், ஜனங்கள், யௌவனம் இவைகளால் உண்டான அஹங்காரத்தை,
மாகுரு = அடையாதே (ஏனெனில்)
காலஃ = உதயாஸ்தமனம் முதலான வியவஹாரங்களால் வியவஹரிக்கப்பட்டகாலம்,
நிமேஷாத் = நிமிஷத்தில்,
ஸர்வம்ஹரதி = எல்லாவற்றையும் பகரிக்கின்றது, (அதாவது எல்லாம் காலவசமாய் நசித்து விடுகிறது ஆகையால்,)
மாயாமயம் = மாயாசக்தியால் செய்யப்பட்ட,
இதமகிலம் = இதோ காணப்படுகிறபாபப்பிரபஞ்சத்தை
ஹித்வா = விட்டு,
ப்ரஹ்மபதம் = பரமார்த்த ஸ்வரூபத்தை,
விதித்வா = விசாரித்துத்தெரிந்துகொண்டு,
ப்ரவிஶ = ஆத்ம ஸ்வரூபத்தை அடைவாயாக.

(தா-ம்.) பொருள், ஜனம், யௌவனம் ஆகிய இவைகளினால் அஹங்காரமடையாதே காலம் எல்லாவற்றையும் நிமிஷத்தில் அபகரிக்கின்றது. மாயா சக்தியால் செய்யப்பட்ட இந்த பிரபஞ்சத்தை விட்டு விட்டு பரமாத்ம ஸ்வரூபத்தை விசாரித்து அறிந்துகொண்டு அப்பரமாத்ம ஸ்வரூபத்தை யடைவாயாக.' (கஉ)

**दिनयामिन्यौ सायं प्रातः**
**शिशिरवसन्तौ पुनरायातः ।**
**कालः क्रीडति गच्छत्यायुः**
**तदपिनमुञ्च त्याशावायुः ॥ १३ ॥**

தி³நயாமிந்யௌ ஸாயம் ப்ராத꞉
ஶிஶிரவஸந்தௌ புநராயாத꞉ ।
கால꞉ க்ரீட³தி க³ச்ச²த்யாயு꞉
தத³பி நமுஞ்சத்யாஶாவாயு꞉ ॥ கங ॥

தி³நயாமிந்யௌ = பகல் இரவு,
ஸாயம்ப்ராத꞉ = அந்திவேளை காலைவேளை,
ஶிஶிரவஸந்தௌ = சிசிரருது, வஸந்தருது, (ஆகிய இவைகள்,)
புந꞉ = மறுபடியும்,
ஆயாத꞉ = வந்துகொண்டிருக்கிறது,
ஏவம் = இந்தப்பிரகாரம்,

கால꞉ = அடியிற் சொல்லப்பட்ட காலம் (குழந்தைகள் இராஜாமந்திரிஎன்று சொல்லிக்கொண்டு விளையாடுவதுபோல்,)
க்ரீட³தி = விளையாடுகிறது,
ஆயு꞉ = வயது,
க³ச்ச²தி = போகிறது,
தத³பி = இவ்வாறெல்லாம் தெரிந்திருந்த போதிலும்

ஆசாவாயு: = காற்றுப் போல் வியாபித்திருக்கும் இந்த ஆசையானது,

மாநுஷம் = மனிதனை, ந முஞ்சதி = விடுகிறதில்லை.

(தா-ம்.) பகல் இரவுகளும் உதயம் அஸ்தமனங்களும் சிசிர ருது வஸந்த ருதுக்களும், திரும்பித் திரும்பி வந்து கொண்டிருக்கின்றன. காலமானது (சிறுகுழந்தைகள் ராஜா மந்திரி என்று பெயர்களை வைத்துக்கொண்டு விளையாடுகின்றதுபோல்) விளையாடுகிறது. ஆயுள் குறைந்து போகின்றது. இவைகள் தெரிந்திருந்தபோதிலும் காற்றுப் போல் எங்கும் வியாபித்திருக்கும் இந்த ஆசையானது மனிதனை விடுவதில்லை. ()

**द्वादशमञ्जरिकाभिरशेषः**
**कथितो वैयाकरणस्यैषः ।**
**उपदेशोभूद्विद्या लिपुणैः**
**श्रीमच्छङ्कर भगवच्चरणैः ॥ १४ ॥**

த்வாதசமஞ்ஜரிகாபிரசேஷ:
கதிதோ வையாகரணஸ்யைஷ: ।
உபதேசோபூத்வித்யாநிபுணை:
ஸ்ரீமச்சங்கர பகவச்சரணை:- க௪

வித்யாநிபுணை: = கலைகளிலும் ஸமர்த்தரான, ஸ்ரீமச்சங்கர பகவச்சரணை: = பூஜ்யர்களான சங்கராசார்யஸ்வாமிகளால், வையாகரணஸ்ய = வ்யாகரணசாஸ்திரத்தைப்படித்த ஒருவனுக்கு,

த்வாதசமஞ்ஜரிகாபி: = பூங்கொத்துப்போல் நெருங்கியதும் மகரந்தத்தை பெற்றிருக்கிறதும், மஞ்

சரிகா என்னும் விருத்தத்தோடுங் கூடியதுமானபன்னிரண்டுசுலோகங்களால்,

உவஷெஶ: = அடியில்சொல்லப்பட்ட இந்த வெகுவருஷகாலம் வேதாந்தம் படித்து அனுபவத்தால் ஸாதிக்கக் கூடிய இந்த விஷயமானது,

கயிக: = சொல்லப்பட்டதாக,

(ஸஹ௱ஜ௧அ—ஆயிற்று.)

(தா-ம்.) வித்தைகளறுபத்துநான்கிலும் சமர்த்தராயும், பூஜிக்கத்தக்கவராயு முள்ள ஸ்ரீமத் சங்கராசாரிய ஸ்வாமிகள் வியாகரண சாஸ்திரத்தை மாத்திரம் படித்து ஆத்மஸ்வரூபானுபவ மில்லாதிருந்த ஒரு வியாகரண வித்துவானுக்கு பூங்கொத்துப்போன்ற மஞ்சரிகா விருத்தத்தோடு கூடியதான மேற்கூறிய பன்னிரண்டு ஶ்லோகங்களால் வெகுகாலம் பிரயாசைப்பட்டுக் கற்க வேண்டிய விஷயங்களை எல்லாம் தனது மகிமா விசேஷத்தால் ஸ்வல்பகாலத்திலேயே உபதேசித்தருளினர் என்ற கருத்து. ()

ஐதி ஸ்ரீ ஶங்கரவிஜய-ஸ்ரீ ௐங்காராய_ு
வெயாகரணஸங்வாதெ-வாஉஹஂஸவரிவ ாஜ
கர்வாயபவய_ு ஸ்ரீஉவஜாரவாயெபுர வக்ஷி
தாஷஶஂஜரிகாஷோதூஂ ஸஉூ.



𑌶𑍍𑌰𑍀𑌶𑌙𑍍𑌕𑌰 𑌭𑌗𑌵𑌤𑍍𑌪𑌾𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯 𑌶𑌿𑌷𑍍𑌯𑌕𑍃𑌤
𑌚𑌤𑍁𑌰𑍍𑌦𑌶𑌮𑌞𑍍𑌜𑌰𑌿𑌕𑌾𑌸𑍍𑌤𑍋𑌤𑍍𑌰 𑌪𑍍𑌰𑌾𑌰𑌂𑌭𑌃.



வியாகரண ஶாஸ்திரத்தைப் படித்துவந்த ஒரு வித்துவானைப்பார்த்து ஒன்று முதல் பன்னிரண்டு வரையிலுள்ள ஶ்லோகங்களை ஸ்ரீ சங்கராசாரியர் உபதேசித்தார். இவ்வுபதேசத்தை யனுஸரித்து வற்புறுத்திப் புலப்படுத்துமாறு அந்த ஆசாரிய புருஷராகிய மகானுடைய சிஷ்யர்கள் சதுர்தஶ மஞ்சரிகா ஸ்தோத்திரமென்னும் இப்பதினான்கு ஶ்லோகங்களையும் மேற்படி பண்டிதனைப்பார்த்து முறையே உபதேசிக்கிறார்கள். இந்த ஶ்லோகாந்தத்திலும் "பஜகோவிந்தம்" என்னும் ஶ்லோகாரம்பத்தைச் சேர்த்து சொல்லவேண்டியது.

## पद्मपाद् उवाच.

काते कान्ता धनगत चिन्ता
वातुल किं तव नास्ति नियन्ता ।
त्रिजगति सज्जनसङ्गतिरेका
भवति भवार्णव तरणे नौका ॥ १ ॥

𑌪𑌦𑍍𑌮𑌪𑌾𑌦 𑌉𑌵𑌾𑌚.

𑌕𑌾𑌤𑍇 𑌕𑌾𑌨𑍍𑌤𑌾 𑌧𑌨𑌗𑌤 𑌚𑌿𑌨𑍍𑌤𑌾
𑌵𑌾𑌤𑍁𑌲 𑌕𑌿𑌂 𑌤𑌵 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌨𑌿𑌯𑌨𑍍𑌤𑌾 ।

த்ரிஜகதி ஸஜ்ஜநஸங்கதிரேகா
பவதி பவார்ணவதரணே நௌகா॥ ௧॥

பத்மபாதர் சொல்லுகிறார்.

வாதூல=ஓ பிராந்தனே !
கா=எப்படிப்பட்ட,
தநகதசிந்தா=பொர்ருளைப் பற்றிய கவலையானது,
தே=உனக்கு,
காந்தா=பிரியமான ஸ்த்ரீ (என்றால்விஷயாதிகளினாலும், பொரு ளாசையினாலும் துக்கமேநேரும்,)
தவ=உனக்கு
நியந்தா=சிக்ஷிப்பவன்,
நாஸ்திகிம்=இல்லையா,
த்ரிஜகதி=இம் மூன்றுலகத்திலும்,
ஸஜ்ஜநஸங்கதி:=ஸத்புருஷர்களுடைய ஸகவாஸம் ஒன்றே,
பவார்ணவதரணே=ஸம்ஸார ஸாகரத்தைத் தாண்டுவதில்,
நௌகா=ஓடமாக,
பவதி=ஆகின்றது.

(தா-ம்) ஓ பிராந்தா ! ஐஸ்வர்யமும் ஸ்திரீயும் எத்தன்மையானது ? துக்கத்தை உண்டு பண்ணுவதன்றோ ? என் சம்சார சமுத்திரத்தை தாண்டுவதற்கு ஓடம் போன்றது முவ்வுலகிலும் ஸத் புருஷர்களுடைய சாங்கத்திய மொன்றேயாம். (௧)

## तोटकाचार्य उवाच.

जटिलोमुण्डी लुञ्छित केशः
काषायाम्बर बहुकृतवेषः ।

पश्यन्नपिच नपश्यति मूढो
ह्युदरनिमित्तो बहुकृतवेषः ॥ २ ॥

തോടകാചാര്യ ഉവാച.

ജടിലോ മുണ്ഡീ ലുഞ്ചിതകേശഃ
കാഷായാംബര ബഹുകൃതവേഷഃ ।
പശ്യന്നപി ച ന പശ്യതി മൂഢോ
ഹ്യുദരനിമിത്തോ ബഹുകൃതവേഷഃ॥ ௨

தோடகாசார்யர் சொல்லுகிறார்.

കാഷായാംബര ബഹുകൃതവേഷഃ=காவித் துணியினால் பெரிதாக செய்யப்பட்டவேஷத்தையுடைய ஸந்யாஸி,

ജടിലോ വാ=ஜடையைதரித்தவனாயிருந்தாலும்,

മുണ്ഡീ വാ=தலையை மொட்டையடித்தவனாயிருந்தாலும்,

ലുഞ്ചിതകേശഃ = கத்தரிக்கப்பட்டகுடுமியையுடையவனாக யிருந்தாலும், (அதாவது காபாலிகோஸாயீ இவர்களுக்கு விரக்தி உண்டாகுமானால் குடுமியைக் கத்தரிப்பது வழக்கம்),

മൂഢഃ=ஸந்தேகப் பட்டவன்

പശ്യന്നപി=ஆத்ம ஸ்வரூபானுஸந்தானம் பண்ணினபோதிலும்,

ന പശ്യതി= பிரம்மஸ்வரூபானுபவமடைய மாட்டான்,

ഹി=இக்காரணத்தால்,

ബഹുകൃതവേഷഃ=அனேகவிதமாக போடப்பட்ட

அடியிற் சொன்ன வேஷமானது, 𑌉𑌦𑌰𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌃 = வயற்றிற்காக ஆகிறது.

(தா-ம்.) காவித்துணியினால் பெருமை படுத்தப்பட்ட வேஷம் பூண்ட சந்நியாசியானவன் ஜடையைத் தரித்தவனாக விருந்தாலும், தலையை மொட்டை யடித்துக்கொண்டவனாக விருந்தாலும், கத்திரிக்கப்பட்ட குடுமியை உடையவனாக விருந்தாலும், (அதாவது. காபாலிகர் கோஸாயிகள் இவர்களுக்கு விரக்தி உண்டாகுமானால் குடுமியைக் கத்தரிப்பது வழக்கம்) சந்தேகம் நிறைந்த மனமுடையவனாய் ஆத்ம ஸ்வரூபானுசந்தானம் பண்ணினபோதிலும், பிரம்ம ஸ்வரூபானுபவம் அடையமாட்டான். ஆகையால் அநேகவிதமாகப் போடப்பட்ட அடியில் சொன்ன வேஷமானது வயிற்றின் பொருட்டாகிறது. (௨)

## हस्तामलक उवाच.

अङ्गं गलितं पलितं मुण्डं
दशनविहीनं जातं तुण्डम् ।
वृद्धो याति गृहीत्वा दण्डं
तदपिनमुञ्च त्याशापिण्डम् ॥ २ ॥

𑌹𑌸𑍍𑌤𑌾𑌮𑌲𑌕 𑌉𑌵𑌾𑌚.

𑌅𑌙𑍍𑌗𑌂 𑌗𑌲𑌿𑌤𑌂 𑌪𑌲𑌿𑌤𑌂 𑌮𑍁𑌣𑍍𑌡𑌂
𑌦𑌶𑌨𑌵𑌿𑌹𑍀𑌨𑌂 𑌜𑌾𑌤𑌂 𑌤𑍁𑌣𑍍𑌡𑌮𑍍 ।

வ்ருத்தோ யாதி க்ருஹீத்வா தண்டம்
ததபி ந முஞ்சத்யாசாபிண்டம்॥ ௯॥

அஸ்தாமலகர் சொல்லுகிறார்.

(யதா=எப்பொழுது)
அங்கம்=சரீரமானது, [தாக,
கலிதம் = தளர்ந்துவிடுகிற
ஜாதம்=உண்டாகிறதோ,
முண்டம்=சிரஸானது,
பலிதம்=கிழத்தனத்தால்
வெளுத்ததோ,
துண்டம் = முகம் அதாவது
வாயானது,
தசனவிஹீனம் = பல்லில்லா
ததாக ஆயிற்றோ,
(ததா=அப்போதும்,)
வ்ருத்த:=கிழவன்,
தண்டம்க்ருஹீத்வா = கழியை
ஊன்றிக்கொண்டு,
யாதி = வெகு ஆசையோடு
ஸஞ்சரிக்கின்றான்,

ததபி=அப்படிப்பட்ட கிழத்தனத்தை அடைந்திருந்தபோதிலும்,
ஆசா = புத்திர மித்திராதி ஆசையானது,
பிண்டம்=தேகத்தை,
நமுஞ்சதி=விடுவதில்லை,
(அதாவது ஈஷணாத்ரய பரித்யாகமே மோக்ஷ பிராப்திக்கு முக்கிய காரணம். குருபதேசத்தில் ஸ்ரத்தையன்றியில் சந்தேகாத்மாவாயிருப்பவனுக்கு ஜடாதாரணம் முதலான விரக்த வேஷத்தால் வயிற்றுப் பிழைப்பேயொழியவேறில்லை.)

(தா-ம்.) சரீரம் திருடம் குறைந்து தளர்ந்தது; தலை நரைத்து விட்டது; பற்கள் உதிர்ந்தன; கிழவன் கழியூன்றி நடக்கிறான். இப்படிப்பட்ட கிழத்தன்மையை யடைந்திருந்த போதிலும் ஆசை மனதைவிட் டொழியவில்லை. (௯)

## हस्तामलकः

अग्रे वह्निः पृष्ठे भानू
रात्रौ चुबुक समर्पितजानुः ।
करतलभिक्ष स्तरुतलवास
स्तदपिनमुञ्च त्याशापाशः ॥ ४ ॥

### 𑌹𑌸𑍍𑌤𑌾𑌮𑌲𑌕𑌃.

𑌅𑌗𑍍𑌰𑍇 𑌵𑌹𑍍𑌨𑌿𑌃 𑌪𑍃𑌷𑍍𑌠𑍇 𑌭𑌾𑌨𑍂
𑌰𑌾𑌤𑍍𑌰𑍌 𑌚𑌬𑍁𑌕 𑌸𑌮𑌰𑍍𑌪𑌿𑌤𑌜𑌾𑌨𑍁𑌃 ।
𑌕𑌰𑌤𑌲𑌭𑌿𑌕𑍍𑌷 𑌸𑍍𑌤𑌰𑍁𑌤𑌲𑌵𑌾𑌸
𑌸𑍍𑌤𑌦𑌪𑌿 𑌨𑌮𑍁𑌞𑍍𑌚𑌤𑍍𑌯𑌾𑌶𑌾𑌪𑌾𑌶𑌃॥ ௪॥

ஹஸ்தாமலகர் சொல்லுகிறார்.

𑌯𑌸𑍍𑌯=எவனுக்கு,
𑌅𑌗𑍍𑌰𑍇=முன்னே, [மோ,
𑌵𑌹𑍍𑌨𑌿 = அக்னி ஹோத்ர
𑌪𑍃𑌷𑍍𑌠𑍇=பின்புறத்தில்,
𑌭𑌾𑌨𑍁𑌃=சூரியனோ,
𑌯𑌃=எவன்,
𑌰𑌾𑌤𑍍𑌰𑍌=இராத்திரியில்,
𑌚𑌬𑍁𑌕𑌸𑌮𑌰𑍍𑌪𑌿𑌤𑌜𑌾𑌨𑍁𑌃=முழங்காலில் வைக்கப்பட்ட முகவாய்க்கட்டையை உடையவனோ,
(அதாவது ஸர்வபரித்யாகிக்கு வஸ்திரம் முதலானதுகள்கூட இல்லாதபடியால் இவைகளால்தானே குளிரைப்போக்கடிக்கவேணும்)
(𑌯𑌃=எவன்,)
𑌕𑌰𑌤𑌲𑌭𑌿𑌕𑍍𑌷𑌃=கையிலேயே

பிச்சையெடுத்து புசிப்ப வனோ,
𑌯𑌃 = எவன்,
𑌤𑌰𑍁𑌤𑌲𑌵𑌾𑌸𑌃 = மரத்தடியில்வஸிப்பவனோ,
𑌤𑌮𑌪𑌿 = அவனையும்,

𑌆𑌶𑌾𑌪𑌾𑌶𑌃 = பாசம்போலுள்ள ஆசையானது,
𑌨 𑌮𑍁𑌂𑌚𑌤𑌿 = விடுவதில்லை,
(எப்படிப் பட்டவனுக்கும் ஆசை விடாதென்பது ஹஸ்தாமலகருடைய கருத்து.)

(தா-ம்) முன் புறத்தில் நெருப்பும், பின் புறத்தில் சூரியனுமாய் முழங்காலில் முகவாய்க்கட்டையை வைத்துக்கொண்டு கைகளிற் பிக்ஷைவாங்கி மரத்தடியில் காலங் கழிப்பவனையும் ஆசை விடமாட்டாது. (௪)

## वार्तिककार उवाच.

कुरुते गङ्गासागरगमनं
व्रतपरिपालन मथवादानम् ।
ज्ञानविहीन स्सर्वमतेन
मुक्तिं नभजति जन्मशतेन ॥ ५ ॥

𑌵𑌾𑌰𑍍𑌤𑌿𑌕𑌕𑌾𑌰 𑌉𑌵𑌾𑌚.

𑌕𑍁𑌰𑍁𑌤𑍇 𑌗𑌂𑌗𑌾𑌸𑌾𑌗𑌰𑌗𑌮𑌨𑌂
𑌵𑍍𑌰𑌤𑌪𑌰𑌿𑌪𑌾𑌲𑌨 𑌮𑌥𑌵𑌾𑌦𑌾𑌨𑌮𑍍 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌹𑍀𑌨 𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌮𑌤𑍇𑌨
𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌂 𑌨𑌭𑌜𑌤𑌿 𑌜𑌨𑍍𑌮𑌶𑌤𑍇𑌨 ॥ ௫ ॥

வார்த்திககாரர் சொல்லுகிறார்.

யஃ = எவன்,
கங்காஸாகரகமநம் = கங்கை, ஸமுத்திரம் முதலான யாத்திரைக்குப் போவுவதை
குருதே = செய்கிறானோ,
யஃ = எவன்,
வ்ரதபரிபாலநம் = நித்திய நைமித்திகம் முதலான விருதத்தைச்செய்கிறானோ,
அதவா = அல்லது,
தாநம் = பாபத்தைப் போக்கி ஸ்வர்க்கத்தைக் கொடுக்கக்கூடியதானத்தை,
குருதே = செய்கிறானோ,
ஸஃ = அவன்,
ஜ்ஞாநவிஹீநஃ = பரமாத்ம ஜ்ஞாநமன்னியில்பாமரனாக இருப்பானேயானால்,
ஸர்வமதேந = எல்லாமதத்தாலும்,
ஜந்மஶதேந = நூறுஜன்மாக்களாலும்,
முக்திம் நபஜதி = மோக்ஷத்தை அடையமாட்டான், (ஜ்ஞாநத்தோடு செய்யப்பட்டகர்மாக்களுக்கு பலமேயொழிய கேவலமானகர்மாக்களுக்குப் பலமே கிடையாதென்பது வார்த்திக காரருடையமுக்கிய அபிப்ராயம்)

(தா-ம்.) எவன் கங்கை சமுத்திரம் (காசி ராமேஶ்வரம்) முதலிய தீர்த்த யாத்திரை போனாலும், நித்திய நைமித்திக விருதத்தைச் செய்தாலும், தானம் செய்தாலும்; ஞானமில்லாத பாமரன் நூறு ஜென்மமெடுத்தாலும் மோக்ஷத்தை யடையமாட்டான். (ரு)

## नित्यानन्द उवाच.

## सुरमन्दिरतरुमूलनिवासः

शय्याभूतल मजिनं वासः ।
सर्वपरिग्रह भोगत्यागः
कस्यसुखं नकरोति विरागः ॥ ६ ॥

நித்யாநந்த உவாச.

ஸுரமந்திர தருமூல நிவாஸ:
ஶய்யாபூதல மஜிநம் வாஸ: |
ஸர்வபரிக்ரஹ போகத்யாக:
கஸ்யஸுகம் நகரோதி விராக:|| ௬ ||

நித்தியாநந்தர் சொல்லுகிறார்.

ஸுரமந்திர தருமூலநி வாஸ:= ஸ்வர்க்கத்திற்கு ச்சமானமான மரத்தடியில்வாஸமும்.
பூதலம்= பூப்பிரதேச மென்னும்,
ஶய்யா =படுக்கையும்,
அஜிநம்= மான்தோல்முதலான தோல்களால்,
வாஸ:=வஸ்திரமும்,
ஸர்வபரிக்ரஹ போகத்யாக: = ஸமஸ்தமான புத்திர மித்திர களத்திர தாஸதாஸீமுதலான தனது ஸேவகஜனங்களாலுண்டான போகவிஷயமான ஸௌக்கியத்திலுடைய பரித்யாகமானது,
யஸ்மிந்ஸதி=யாதொரு விரக்தியேற்பட்டமாத்திரத்தில்
பவதி=உண்டாகிறதோ,
விராக: = அப்படிப்பட்ட விரக்தியானது,
கஸ்ய=எவனுக்கு,
ஸுகம் = நிரந்தரானந்தத்தை,
நகரோதி = செய்யமாட்டாது

(ஸகல விஷயேச்சையையும் பரிகரிப்பதே நித்யாநந்த மோக்ஷமெனநித்யாநந்தரின் முக்கியக்கருத்து.

(தா-ம்.) ஸ்வர்க்கத்திற்கு ஸமமாக மர்த்தடியில் வாஸமும், பூமியின்மீது படுக்கையும், மான்தோல் முதலிய தோல்களால் வஸ்திரமும் கொண்டு எல்லாவித போக விஷய செளக்கியங்களின் பரித்தியாகமானது எவனுக்கு நிரந்தராநந்தத்தைக் கொடாது. (௬)

आनन्दगिरिस्वामिनः ऊचुः.

योगरतोवा भोगरतोवा
सङ्गरतोवा सङ्गविहीनः ।
यस्यब्रह्मणि रमते चित्तं
नन्दति नन्दति नन्दत्येव ॥ ७ ॥

ஆநந்தகிரி ஸ்வாமிந: ஊசு:.
யோகரதோவா போகரதோவா
ஸங்கரதோவா ஸங்கவிஹீந: |
யஸ்யப்ரஹ்மணி ரமதே சித்தம்
நந்ததி நந்ததி நந்தத்யேவ|| ௭||

ஆனந்தகிரி ஸ்வாமி சொல்லுகிறார்.

யோகரதோவா = மந்திர போகம்முதலிய யோகங்களில் ஆஸக்தி யுடையவனாகயிருந்தாலும்,

போகரதோவா = விஷய சுகத்தில் ஆவலுள்ளவனாகயிருந்தாலும்,
ஸங்கரதோவா = புத்திரமித்திராதி ஜன சமூகத்தில் அநுராக முள்ளவனாக இருந்தாலும்,
யஸ்ய=எவனுடைய,
சித்தம்=மனது,
ப்ரஹ்மணி = அவஸ்தாத்ரய ஸாக்ஷியாய் எங்கும் பரிபூர்ணமாய வஸ்துவினிடத்தில்,
ரமதே = ஐக்கியபாவத்தாலானந்த மடைகின்றதோ,
(ஸ:=அப்புருஷன்)
நந்ததி நந்ததி நந்தத்யேவ= எக்காலத்திலும் ஆனந்தஸ்வரூபமாகவே இருக்கிறான். (மனோலயமே மோக்ஷமென்றும், மனோவிகாரமே பிரபஞ்சமென்றும் ஆநந்தகிரிஸ்வாமிகளுடைய முக்கிய கருத்து.)

(தா-ம்.) மந்திரயோகமுதலான யோகங்களில் ஆஸக்தியுள்ளவனைப்போல் தோன்றினாலும் விஷயங்களை யநுபவிப்பதி லாசையுள்ளவனைப்போல் தோன்றினாலும், புத்திர மித்திர களத்திராதியர்களுடன் பற்றுள்ளவனைப் போல் தோன்றினாலும் அப்படிக்கொற்ற பற்றில்லாதவனைப்போல் தோன்றினாலும் எவனதுமனம் பிரம்மாதிகளிடத்தில் ஆனந்தமடைகின்றதோ அவன் எந்த காலத்திலும் ஆநந்த ஸ்வரூபியாகவே இருக்கிறான். (எ)

## दृढभक्त उवाच.

भगवद्गीता किञ्चिदधीता
गङ्गाजललवकणिकापीता ।

सकृदपि येनमुरारिसमर्चा
क्रियते तस्ययमोऽपि न चर्चां ॥ ८ ॥

த்ருடபக்த உவாச

பகவத்கீதா கிஞ்சிததீதா
கங்காஜலலவகணிகாபீதா ।
ஸக்ருதபியேந முராரிஸமர்சா
க்ரியதே தஸ்யயமோபி ந சர்சாம் ॥ அ ॥

த்ருடபக்தர் சொல்லுகிறார்.

யேந=எவனால்,
பகவத்கீதா= ஸ்ரீகிருஷ்ணபரமாத்மாவானவர் அர்ஜுனனுக்குபதேசித்த தத்வார்த்த ப்ரதிபாதகமான பகவத்கீதை என்ற கிரந்தமானது,
கிஞ்சிதபி-கொஞ்சமேனும்
அதீதா = ஸத்குருபதேசத்தால் தெரிந்துகொள்ளப் பட்டதோ,
(யேந=எவனால்,)
கங்காஜலலவகணிகா-கங்காஜல திவலையானது,
பீதா = பானம் பண்ணப் பட்டதோ,
(யேந=எவனால்,)
முராரிஸமர்சா=ஸ்ரீமந்நாராயணனை அசஞ்சலபக்தியோடு பூஜிப்பதானது,
ஸக்ருதபி = ஒருதடவையாவது, [தோ,
க்ரியதே = செய்யப்படுகிற
தஸ்ய=அப்புருஷனுக்கு,
யமோபி=யமதர்மராஜனும்
சர்சாம்= புண்யபாப விசாரத்தை,
(நகரோதி=செய்வதில்லை,)

வேதாந்தவிசாரணை, கங்கை, காவேரி முதலான நதி

ஸ்நானம், நிச்சலபக்தியோடு ப்கவதாராதனை ஆகிய இவை கள் மோக்ஷத்தை யடைய முக்கிய ஸாதனங்கள்.)

(தா-ம்.) எவன் ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மாவால் அர்ஜ்ஜுந ஸ்வாமிக்கு உபதேசிக்கப்பட்ட தத்வார்த்த பிரதிபாதகமான பகவத்கீதையை கொஞ்சமேனும் ஓதுகின்றானோ, கங்காதீர்த்தத்தில் திவலையாவது பானஞ் செய்கின்றானோ, ஸ்ரீமந்நாராயணனை ஒருபொழுதாவது நன்றாய்ப்பூஜிக்கின்றானோ, அவனுடைய புண்ணியபாப விசாரத்தை யமனும் செய்யமாட்டான். (௮)

## नित्यानन्द् उवाच.

पुनरपि जननं पुनरपि मरणं
पुनरपि जननी जठरे शयनम् ।
इहसंसारे बहुदुस्तारे
कृपयापारे पाहि मुरारे ॥ १ ॥

𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌦𑍍 𑌉𑌵𑌾𑌚.

𑌪𑍁𑌨𑌰𑌪𑌿 𑌜𑌨𑌨𑌂 𑌪𑍁𑌨𑌰𑌪𑌿 𑌮𑌰𑌣𑌂
𑌪𑍁𑌨𑌰𑌪𑌿 𑌜𑌨𑌨𑍀 𑌜𑌠𑌰𑍇 𑌶𑌯𑌨𑌮𑍍 ।
𑌇𑌹𑌸𑌂𑌸𑌾𑌰𑍇 𑌬𑌹𑍁𑌦𑍁𑌸𑍍𑌤𑌾𑌰𑍇
𑌕𑍃𑌪𑌯𑌾𑌪𑌾𑌰𑍇 𑌪𑌾𑌹𑌿 𑌮𑍁𑌰𑌾𑌰𑍇 ॥

நித்யாநந்தர் சொல்லுகிறார்.

𑌬𑌹𑍁𑌦𑍁𑌸𑍍𑌤𑌾𑌰𑍇 = எவ்விதத்தாலும் தாண்டமுடியாத,
𑌽𑌪𑌾𑌰𑍇 = கரையில்லாத,
𑌇𑌹𑌸𑌂𑌸𑌾𑌰𑍇 = இந்தக்குயவனுடையசக்கிரம்போல் ஜனனமரணம் முதலானவைகளால் எப்பொழுதும் சுற்றிக்கொண்டிருக்கப்பட்ட இந்த ஸம்ஸாரத்தில்,
𑌪𑍁𑌨𑌰𑌪𑌿 = இறந்தபிறகு மறுபடியும்,
𑌜𑌨𑌨𑌂 = கர்மாநுஸாரமாய் உற்பத்தியும்,
𑌪𑍁𑌨𑌰𑌪𑌿 = ஜநித்தபிறகு மறுபடியும்,
𑌮𑌰𑌣𑌂 = சாவும்,
𑌪𑍁𑌨𑌰𑌪𑌿 = மறுபடியும்,
𑌜𑌨𑌨𑍀𑌜𑌠𑌰𑍇 = தாயின்வயிற்றில்,
𑌶𑌯𑌨𑌂 = வஸிப்பதுமாக,
𑌸𑌂𑌭𑌵𑌤𑌿 = ஏற்படுகிறது,
(𑌅𑌤𑌏𑌵 = ஆகையால்,)
𑌹𑍇𑌮𑍁𑌰𑌾𑌰𑍇 = முரனென்னும் அரக்கனைக்கொன்ற ஸ்ரீமந்நாராயணா,
𑌕𑍃𑌪𑌯𑌾 = தயையோடு,
𑌪𑌾𑌹𑌿 = காப்பாற்றும்,
(ஸம்ஸார நிவ்ருத்திக்கும் மோக்ஷப்ராப்திக்கும் பக்தி மார்க்கமேகாரணம்.)

(தா-ம்.) எவ்விதத்திலும் தாண்டமுடியாத கரையில்லாத குயவனுடைய சக்கிரம்போற் சுற்றிக்கொண்டிருக்கப்பட்ட இந்த ஸம்ஸாரத்தில் செத்தபிறகு மறுபடி ஜநநமும் ஜநித்தபிறகு மறுபடி தாய்வயிற்றில் சயனமுமாயிருக்கின்றதாகையால் ஸ்ரீமந்நாராயணா என்னைக் காத்தருளும். (௧)

## योगानन्दः

## रथ्याकर्पट विरचितकन्थाः

पुण्यापुण्य विवर्जितपन्था: ।
योगी योग विवर्जितचित्तो
रमते बालोन्मत्तवदेव ॥ १० ॥

योगानन्द:.

रथ्याकर्पट विरचितकन्थ:
पुण्यापुण्य विवर्जित पन्था: ।
योगी योग नियोजित चित्तो
रमते बालोन्मत्तवदेव ॥ ௧௦ ॥

யோகாநந்தர் சொல்லுகிறார்.

रथ्याकर्पट विरचितकन्थ: = இராஜவீதியில்கிடக்கின்ற கிழிசல்களால் சேர்க்கப்பட்ட வஸ்திரத்தை யுடையவனையும்,

पुण्यापुण्यविवर्जित पन्था: = புண்ய்பாபமென்கிற விதிநிஷேதமார்க்கமில்லாதவனையும்,

बालोन्मत्तवदेव = சிறுவன் பித்தன் இவர்களைப் போலவும் இருக்கபபட்ட

योगी = யோகியானவன்,

योगनियोजितचित्त: = பிரம்ம ஸ்வரூபானுஸந்தானத்தில் நன்றாய் நிலைநிறுத்தப்பட்ட சித்தவிருத்தியுடையவனாய்,

रमते = ஆனந்த மடைகின்றான்.

(தா-ம்.) இராஜமார்க்கத்திற் கிடக்கும் கந்தைத்துணியினுடுப்பும், புண்யபாபமென்ற விதி நிஷேதமில்லாத மார்க்கத்தை யுடையவனும், சிறுவன் போலும் பித்தன்

போது மிருக்கப்பட்ட யோகியானவன் பிரம்ம ஸ்வரூபானு சந்தானத்தில் நன்றாய் நிலைநிறுத்தப்பட்ட சித்த விருத்தியுடையவனாய் ஆனந்த மடைகின்றான். (௧௦)

सुरेन्द्रः.

कस्त्वं कोहं कुत आयातः
कामे जननी कोमे तातः।
इति परिभावित निजसंसारः
सर्वं त्यक्त्वा स्वप्नविचारः ॥ ११ ॥

ஸுரேந்த்ர꞉.

கஸ்த்வம் கோஹம் குத ஆயாத꞉
கா மே ஜநநீ கோ மே தாத꞉ ।
இதி பரிபாவித நிஜஸம்ஸார꞉
ஸர்வம் த்யக்த்வா ஸ்வப்நவிசார꞉॥ ௧௧॥

ஸுரேந்தரர் சொல்லுகிறார்.

த்வம்=என்னைக்காட்டிலும் வேறான நீ,
க꞉=யார்,
அஹம்=உன்னைக்காட்டிலும் வேறான நான்,
க꞉=யார்,
குத꞉=எங்கிருந்து,
ஆயாத꞉=வந்தோம்,
மே ஜநநீ=என்னைபெற்ற தாய்,
கா=யார்,
மே=எனக்கு,
தாத꞉=தகப்பன்,
க꞉=யார்,
இதி=என்று,

பரிபாவிதநிஜஸம்ஸார: = நன்றாய் ஆலோசித்து நிச்சயித்த தன்னுடைய புத்திர மித்திர களத்திராதி வர்க்கத்தை யுடையவனும்,

ஸர்வம் = அடியிற்சொன்ன எல்லாவற்றையும்,

த்யக்த்வா = விட்டு,

ஸ்திதஸ்சேத் = இருந்தால்,

ஸ்வப்னவிசார: = கனவில்கண்ட பதார்த்தங்களில் ஏற்பட்ட மித்யா ஜ்ஞானம் போன்ற நிச்சய ஜ்ஞானமானது,

ஜாயதே = உண்டாகின்றது.

(தா-ம்) நீயார்? நான்யார் எங்கிருந்து வந்தோம்? என்னைப் பெற்ற தாய் யார்? என் தகப்பன் யார்? இவைகளைத் தீரவிசாரித்து ஸம்ஸாரத்தின் நிஜஸ்திதியையுணர்ந்து எல்லாவற்றையும் விட்டொழித்திருக்குங்கால் இவை கனவிற்காணப்படுவனபோற் பொய்யென்றேற்படும். (கக)

## मेथातिथि रुवाच.

त्वयि मयि सर्वत्रैकोविष्णुः
व्यर्थं कुप्यसि मय्यसहिष्णुः ।
भवसमचित्त स्सर्वत्रत्वं
वांछस्यचिराद्यदि विष्णुत्वम् ॥ १२ ॥

மேதாதிதிருவாச.

த்வயி மயி ஸர்வத்ரைகோ விஷ்ணு:
வ்யர்த்தம் குப்யஸி மய்யஸஹிஷ்ணு: |

𑌭𑌵 𑌸𑌮𑌚𑌿𑌤𑍍𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌤𑍍𑌵𑌂
𑌵𑌾𑌞𑍍𑌛𑌸𑍍𑌯𑌚𑌿𑌰𑌾𑌦𑍍𑌯𑌦𑌿 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌤𑍍𑌵𑌮𑍍 ॥ ௧௨

## மேதாதிதி சொல்லுகிறார்

𑌤𑍍𑌵𑌯𑌿 = எதிரில் நிற்கின்ற உன்னிடத்திலும்,
𑌮𑌯𑌿 = சொல்லப்பட்ட என்னிடத்திலும்,
𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 = எங்கும்,
𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌃 = வ்யாபகனான பரமாத்மா,
𑌏𑌕𑌃 = ஒருவனே,
𑌮𑌯𑌿 = உன்னைக் காட்டிலும் வேறு என்று நினைத்த என்னிடத்தில்,
𑌵𑍍𑌯𑌰𑍍𑌥𑌂 = பிரயோஜனமன்னியில்
𑌕𑍁𑌪𑍍𑌯𑌸𑌿 = கோபமடைகிறாய்,
𑌅𑌚𑌿𑌰𑌾𑌤𑍍 = சீக்கிரமாய்,
𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌤𑍍𑌵𑌂 = ஸர்வவ்யாபகனான பரமாத்வஸ்வரூபமடைய
𑌵𑌾𑌞𑍍𑌛𑌸𑌿 𑌯𑌦𑌿 = கோருவாயானால்,
𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 = ஸர்வப் பிராணிகளிடத்திலும்,
𑌸𑌮𑌚𑌿𑌤𑍍𑌤𑌃 = ஸமமான புத்தியுடையவனாக,
𑌭𑌵 = ஆவாய்.

(𑌶𑍁𑌨𑌿 𑌚𑍈𑌵 𑌶𑍍𑌵𑌪𑌾𑌕𑍇 𑌚 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌾𑌃 𑌸𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃) என்று பகவத்வாக்யத்தில் செல்லப்பட்ட ஸாவபுதத்திலும் தான் என்ற புத்தியை யடைந்து பிரம்ம விசாரம் பண்ணுவது மோக்ஷ சாதனம்.

(தா-ம்.) உன்னிடத்திலும் என்னிடத்திலும் யெங்கும பரமாத்மா ஒருவரே வியாபித்திருக்க, பிரயோஜனமன்றியில் நீ என்னிடத்தில் கோபமடைகிறாய். சீக்கிரத்தில் பரமாத்ம ஸ்வரூபத்தையடைய விரும்புவாயாகில்

ஸகல ஜீவராசிக ளிடத்திலும் ஸமசித்தனாக விருக்க வேண்டும். (௧௨)

## भारतीवंश उवाच

कामक्रोधं लोभं मोहं
त्यक्त्वात्मानं पश्यंविमोहम् ।
आत्मज्ञानविहीनामूढाः
तेपच्यन्ते नरकनिगूढाः ॥ १३ ॥

பாரதீவம்ஶ உவாச.

காமக்ரோதம் லோபம் மோஹம்
த்யக்த்வாத்மாநம் பஶ்யவிமோஹம் ।
ஆத்மஜ்ஞாந விஹீநாமூடா:
தேபச்யந்தே நரகநிகூடா:॥ ௧௩॥

பாரதீவம்ஶர் சொல்லுகிறார்.

காமம் = எப்பொழுதும் விரும்பிக்கொண்டிருப்ப தான மனோதர்மத்தையும், க்ரோதம் = த்வேஷிக்கப்பட்டதான மனோதர்மத்தையும் லோபம் = பேராசையினால் செலவுசெய்யாம லிருப்பதையும் மனோ தர்மத்தையும், மோஹம் = அஜ்ஞானத்தையும், த்யக்த்வா = விட்டு, விமோஹம் - அஜ்ஞானமில்லாத ஆத்மாநம் = பரமாத்மாவை, பஶ்ய = பாரும்,

ஆத்மஜ்ஞாநவிஹீநா: = தத்வ ஜ்ஞானமில்லாதவர்கள், (யே = எவர்களோ.) தே மூடா: = அம்மூடர்கள், நரகநிகூடா: = நரகத்தில் தள்ளப்பட்டு, பச்யந்தே = (யம புருஷர்களால்) உபத்திரவிக்கப் படுகிறார்கள்.

(தா-ம்.) காமம், குரோதம், லோபம், மோஹம் ஆகிய இவைகளைவிட்டு அஜ்ஞான ரஹிதரான பரமாத்மாவைப்பாரும். தத்வஜ்ஞானமில்லாத மூடர்கள் நரகத்தில் தள்ளப்பட்டு உபத்திரவப்படுகிறார்கள். (௧௩)

## सुमति रुवाच.

गेयं गीता नामसहस्रं
ध्येयं श्रीपति रूपमजस्रम् ।
नेयं सज्जनसङ्गमनिशं
देयं दीनजनायचवित्तम् ॥ १४ ॥

ஸுமதி ருவாச.

கேயம் கீதா நாமஸஹஸ்ரம்
த்யேயம் ஶ்ரீபதி ரூபமஜஸ்ரம் ।
நேயம் ஸஜ்ஜந ஸங்கமநிஶம்
தேயம் தீநஜநாயச வித்தம் ॥ ௧௪॥

ஸுமதி சொல்லுகிறார்.

கீதாநாமஸஹஸ்ரம் = பகவத்கீதை, பரமசிவனால் பார்வதிக்குபதேசிக்கப்பட்ட ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாமம் இவை,
கேயம் = ஸத்குரு மூலமாய் நன்றாக அறிந்து பாராயணம் செய்யவேணும்,
ஸ்ரீபதிரூபம் = லக்ஷ்மிகாந்தனை ஸ்ரீமந்நாராயணனுடைய திவ்ய ஸ்வரூபத்தை,
த்யேயம் = ஆசாரியோபதேசத்தை யனுஸரித்து மனதில் த்யானிக்கவும்,
ஸஜ்ஜநஸங்கம் = ஸத்புருஷர்களுடைய ஸஹவாஸம்,
அஜஸ்ரம் = எப்பொழுதும்,
நேயம் = அடையத்தக்கது,
தீநஜநாய = ஏழைஜனங்களுக்கு,
வித்தம் = பொருளை,
தேயம் = கொடுக்கவேணும்.

(தா-ம்.) பகவத்கீதை ஸ்ரீவிஷ்ணு திவ்ய ஸஹஸ்ரநாமம் இவைகள் சத்குரு மூலமாக உபதேசம்பெற்று பாராயணம் செய்யத்தக்கன. லக்ஷ்மீகாந்தனை ஸ்ரீமந்நாராயணனுடைய திவ்ய ஸ்வரூபம் மனதில் எக்காலததிலும் தியானிக்கத்தக்கது. ஸத்புருஷர்களுடைய சகவாசம் எப்போதும் செய்யத்தக்கது. ஏழைகளுக்கு பொருளுதவி செய்யத்தக்கது. (௧௪)

मूढः कश्चन वैयाकरणो

डुकृङ्करणाध्ययनघुरीणः ।

## श्रीमच्छङ्करभगवच्छिष्यैः
## बोधित आसी च्छोधितकरणः ॥१५॥

𑌅𑌶𑍍𑌰𑍁𑌤𑌃 𑌕𑌶𑍍𑌚𑌨 𑌵𑍈𑌯𑌾𑌕𑌰𑌣𑍋
𑌡𑍁𑌕𑍃𑌞𑍍𑌕𑌰𑌣𑌾𑌧𑍍𑌯𑌯𑌨𑌶𑍀𑌲𑌃
𑌶𑍍𑌰𑍀𑌶𑌙𑍍𑌕𑌰𑌭𑌗𑌵𑌚𑍍𑌛𑌿𑌷𑍍𑌯𑍈𑌃
𑌬𑍋𑌧𑌿𑌤 𑌆𑌸𑍀𑌚𑍍𑌛𑍋𑌧𑌿𑌤𑌕𑌰𑌣𑌃 ॥ ௧௫ ॥

𑌅𑌶𑍍𑌰𑍁𑌤𑌃 = வேதாந்த சிரவணமில்லாமற் போனபடியால் ஆத்மஸ்வரூபானுஸந்தானமில்லாதவனும், 𑌡𑍁𑌕𑍃𑌞𑍍𑌕𑌰𑌣𑌾𑌧𑍍𑌯𑌯𑌨𑌶𑍀𑌲𑌃 = டுக்ருங்கரணம் முதலான வ்யாகரணசாஸ்திரத்திலிருக்கப்பட்ட சூத்திரங்களைப் படிப்பதில்மிகவும்ஸமர்த்தனை, 𑌕𑌶𑍍𑌚𑌨 𑌵𑍈𑌯𑌾𑌕𑌰𑌣𑌃 = வியாகரணசாஸ்திரத்தை மாத்திரம்படித்த ஒருவித்வான், 𑌶𑍍𑌰𑍀𑌶𑌙𑍍𑌕𑌰𑌭𑌗𑌵𑌚𑍍𑌛𑌿𑌷𑍍𑌯𑍈𑌃 = மிகவும் பூஜ்யாளான ஸ்ரீசங்கராசாரியருடைய பதினன்கு சிஷ்யர்களாலும், 𑌬𑍋𑌧𑌿𑌤𑌃 = உபதேச மூலமாய் பரமார்த்தத்தை போதிக்கப்பட்டு, 𑌶𑍋𑌧𑌿𑌤𑌕𑌰𑌣𑌃 = ஸ்வரூபானுஸந்தானத்தால் சுத்தாந்தக் கரணனாக, 𑌆𑌸𑍀𑌤𑍍 = ஆனான்.

(தா-ம்.) இந்தப்பிரகாரம் "டுக்ருங்" என்னும் வியாகரண ஸூத்திரத்தை பெரிதும் படித்த ஆத்மஜ்ஞானமில்லாத ஒரு வித்துவான் ஸ்ரீமத் சங்கர பகவத் பாதரு

சிஷ்யர்களால் பரமார்த்தோபதேசம் செய்யப்பெற்று சுத்தாந்த:கரணனாக ஆனான். (௧௫)

இவ்வாறு ஸ்ரீ சங்கரவிஜயத்தில் ஸ்ரீமத் சங்கர வையா
கரண ஸம்வாதத்தில் ஆசார்யர் கட்டளையின்படி
சிஷ்யர்களால் உபந்யஸிக்கப்பட்ட சதுர்த்
தச மஞ்ஜரிகா ஸ்தோத்திரம்
ஸம்பூர்ணம்.







ஸ்ரீமத்ச்சங்கரபகவத் பாதாசாரிய ஸ்வாமிகள்.